تاميلي

للمسلمين

سلسلة الهداية (15)

# நபி (ஸல்) அவர்களின்

# பிரதிநிதி



# من هو خليفة النبي صلى الله عليه وآله وسلم ؟

அபூஷிஃப்னா

நபி (ஸல்) அவர்களது ஹயாத்தின் போதும்,
அவாகளது வபாத்தின் போதும் தூய
இஸ்லாத்தின் கொள்கைகளை முழுமையாகப்
பேணி நடந்த அனைத்து இறை நேசர்களுக்கும்

# சமர்ப்பணம்

# என்னுரை

இஸ்லாம் மனித வாழ்வின் சகல துறைகளுக்குமான வழிகாட்டலைக் கொண்ட பரிபூரண மார்க்கம் என்ற வகையில், அதன் விதிகளும் பரிந்துரைகளும் வாழ்க்கையை மிகச் சிறப்பான ஒழுங்கமைப்பின் பால் இட்டுச் செல்லும் அசாதாரணத் திறனைக் கொண்டுள்ளன.

நபி *(ஸல்)* அவர்கள், தமது வாழ்க்கை முழுவதிலும், ஒரு சிறந்த தலைமைத்துவ வழிகாட்டலை உலகுக்கு வழங்கியுள்ளார்கள். தலைமைத்துவமின்றி ஒரு சமூகம் வெற்றி பெற முடியாது, முன்னேற்றம் காண முடியாது, உலகில் ஜீவிக்கவும் முடியாது என்பதை பல்வேறு சந்தர்ப்பங்களில் உதாரணங்களூடாகவும், அறிவுரைகளூடாகவும் தெளிவுறுத்தியிருக்கின்றார்கள்.

நபியவர்கள், தமது தலைமைத்துவத்தின் கீழிருந்த ஒரு மாபெரும் சமூகத்தை, தமக்குப் பின்னர் அதனை வழிநடத்தும் தலைவர் யாரென்பதை அறிவிக்காமலேயே வபாத்தாகினார்கள் என்ற கொள்கை, நபி *(ஸல்)* அவர்களது ஆளுமை, திறன், கட்டுப்பாடு என்பவற்றில் மட்டுமன்றி, அவர்களது நபித்துவத்திலும் கூட ஐயத்தைக் கிளர்த்தி விடக் கூடிய மாபெரும் குற்றச்சாட்டு எனலாம். உலகம் முழுவதற்கும் மிகச் சிறந்த முன்மாதிரியாக வாழ்ந்து காட்டிய ஓர் அற்புதமான தலைவர் இத்தகைய தவறைச் செய்ய முடியாது.

எனவே, நபி *(ஸல்)* அவர்கள் தமக்குப் பின்னர் தம் சமூகத்தை வழிநடத்தும் தலைமைத்துவத்தை இனங்காட்டினார்கள். ஆனால், அதனை விளங்கிக் கொண்டதிலே ஏற்பட்ட குளறுபடிகள், அல்லது விளங்கிக் கொள்வதில் கொண்டிருந்த விருப்பமின்மை, முரட்டுப் பிடிவாதம், குறுகிய அரசியல் இலாப நோக்குகள் என்பன பிற்பட்ட முஸ்லிம் சமூகத்தை பல கூறுகளாகப் பிரித்து, உலகளாவிய ரீதியில் முஸ்லிம்களைப் பலவீனப்படுத்தியும் விட்டன.

எனவே, நபி *(ஸல்)* அவர்களினால் இனங்காண்பிக்கப்பட்ட முஸ்லிம் சமூகத்தின் தலைமைத்துவம் யார் என்பதைச் சரியாக விளங்கிக் கொண்டு அவர்களைப் பின்பற்றும் கடமையை முழுமையாக நிறைவேற்றத் தயாராகும் போதே, முஸ்லிம் சமூகம் தன் சகல இழப்புகளையும், பின்னடைவுகளையும் விலக்கி, முன்னேற்றப் பாதையிலும், கௌரவத் தோற்றத்திலும் வாழும் சந்தர்ப்பத்தைப் பெறும் என்பது உறுதி.

அத்தகைய ஒரு சந்தர்ப்பத்தை இனங்காண்பிக்கும் தூய பணிக்காகச் சேகரிக்கப்பட்டுள்ள சிறு தொகுப்பே இந்நூலாகும். எல்லாம் வல்ல அல்லாஹ் இச்சிறு பணியை ஏற்றுக் கொள்வானாக*!*

*அபூஷிஃப்னா*

## நபி (ஸல்) அவர்களின் இறுதித் தூதுத்துவம்

அல்லாஹ், மனித சமூகத்தை நேர்வழிப்படுத்துவதற்கான தனது தொடர் செயற்பாட்டின் ஓர் அங்கமாக நபிமார்களை அனுப்பி வந்தான். அந்த நபிமார்களில் இறுதித் தூதுத்துவத்துடன் அனுப்பப்பட்ட முஹம்மத் (ஸல்) அவர்கள், அறியாமை இருளின் கொடும்பிடியிலிருந்து மனித சமூகத்தை மீட்டெடுத்ததோடு, அனைத்து சீர்கேடுகளிலிருந்தும் தூரமாக்கப்பட்ட சிறப்பான வாழ்வொழுங்கும் ஆரோக்கிய நெறிமுறைகளும் கொண்ட தூய மார்க்கத்தையும் அச்சமூகத்துக்கு இனங்காண்பித்தார்கள்.

நபிகளாரின் ஜீவித காலப்பகுதியில் அவர்களை ஏற்றுக் கொண்டிருந்த அனைத்து மக்களும் கருத்து வேறுபாடுகளையும் சமூக முரண்பாடுகளையும் களைந்து சர்வதேச மயப்படுத்தப்பட்ட உயர்ந்த சகோதரத்துவ ஒற்றுமையை இறுக்கமாகப் பற்றிப் பிடித்த நிலையில் தமது வாழ்க்கையை முன்னெடுத்துச் சென்றனர். நபிகளாரின் ஒவ்வொரு வார்த்தையும் அசைவும் மனித சமூகத்துக்கான அளப்பரிய முன்மாதிரியாகத் திகழ்ந்தன.

நபி (ஸல்) அவர்கள், தம்மோடு இணைந்து தமது சமய நடைமுறைகளுக்கும் தூதுத்துவப் பணிகளுக்கும் மிகப்பெரும் உதவியாக இருந்து வந்த தமது தோழர்களுடன் நெருக்கமான அன்பையும் உறவையும் பேணி வந்தார்கள். ஒவ்வொரு ஸஹாபியும் தத்தமக்குரிய பிரத்தியேக சிறப்பும் அந்தஸ்தும் பெற்றுத் திகழ்ந்தனர். அச்சிறப்புகள் அவர்களது இம்மை மறுமை நிலைகளையும் ஆளுமைப் பண்புகளையும் தெளிவுறுத்தும் அம்சங்களாக விளங்கின.

ஆயினும், நபிகளாருக்குப் பின் முஸ்லிம் சமூகத்தினதும் இஸ்லாமிய உலகினதும் நடவடிக்கைகளைப் பொறுப்பேற்று

முன்னெடுக்கக்கூடிய தலைமைத்துவ அந்தஸ்துள்ள நபர் பற்றிய ஊகங்களும் கணிப்புகளும் தெளிவற்றவையாகவே இருந்து வந்தன. ஒவ்வொரு ஸஹாபிக்கும் உரிய பிரத்தியேக சிறப்புகள் வெவ்வேறு கோணங்களில் அவர்களின் அந்தஸ்துகளை உயர்த்திக் காண்பித்ததோடு, தலைமைத்துவ அந்தஸ்து தொடர்பான கணிப்புகளில் சங்கடங்களையும் ஏற்படுத்தி விட்டிருந்தன.

ஒரு சமூகத்தின் வளர்ச்சியிலும் முன்னேற்றத்திலும் மிகப் பெரும் தாக்கம் செலுத்தக்கூடிய தலைமைத்துவம் என்பது, தெளிவற்ற நிலையிலமைந்து அதன் மூலம் தம் 23 வருட சிரமங்களையுடைத்த சமயப் பணியின் பயன்பாடு தூர்ந்து போய்விடுவதை நபிகளார் ஒரு போதும் விரும்பவில்லை. அல்லாஹ்வும் அத்தகைய நிலையில் முஸ்லிம் சமூகத்தை கைவிட்டு விட தன் இறை பண்புகளை விட்டும் நீங்கியவனுமல்ல.

தமக்குப் பின் முஸ்லிம் சமூகத்தின் கடிவாளத்தைக் கையிலெடுக்கும் தகுதியும் இறை நியதியின் அடிப்படையிலான ஆளுமையும் கொண்டவர் யாரென்பதை நபி (ஸல்) அவர்கள் தெளிவாக உணர்ந்திருந்தார்கள். தமது நபித்துவ வாழ்க்கையின் ஆரம்பம் தொடக்கம் அது பற்றிய சமிக்ஞைகளை சூசகமாகக் குறிப்பிட்டும் வந்தார்கள். எனினும், முஸ்லிம் சமூகத்தின் தலைவிதியையே மாற்றியமைக்க க்கூடிய இம்மாபெரும் அம்சத்தை பகிரங்கப்படுத்துவதற்கான சந்தர்ப்ப சாதகங்களை எதிர்பார்த்திருக்க வேண்டிய நிர்ப்பந்தத்தை, தமது இறுதிக் காலப்பகுதியில் நபிகளார் எதிர்நோக்கினார்கள்.

அல்லாஹ், அந்த நிர்ப்பந்தங்களையெல்லாம் அலட்சியப்படுத்தும் படியான தன் கட்டளையின் மூலம், முஸ்லிம் சமூகத்தின் அடுத்த தலைவரைக் குறித்துரைக்கும் ஏவலை நபிகளாருக்கு விடுத்தான்.

தமது தூதுத்துவப் பணியை நிறைவு செய்வதற்காக நபி (ஸல்) அவர்கள், அல்லாஹ்வின் இறுதிக் கட்டளையை அமுல்படுத்தத் தயாரானார்கள்.

# கதீர்கும் நிகழ்வு

ஹிஜ்ரி பத்தாம் வருடம்... ஹஜ்ஜுடைய காலம்... ஹிஜாஸ் பாலைவனங்களில் ஹாஜிகளின் பெருந்தொகையான கூட்டம் ஒன்றுகுழுமியிருந்தது. அவர்கள் அனைவரும் ஒரே நோக்கத்துடன், ஒரே உணர்வுடன் நடந்து சென்று கொண்டிருந்தார்கள்.

இவ்வருட ஹஜ் விசேடமான உஷ்ணத்தினால் தனித்துவம் பெற்றதாக விளங்கியது. முஸ்லிம்கள் தமது பயணத்தை இடைநிறுத்தி, விரைவாகவும் ஆர்வமாகவும் சிறு வீடுகளை ஏற்படுத்திக் கொண்டார்கள்.

சூடான தல்பியாவின் சப்தம் மக்கா பாலைவனங்களில் உயர்ந்து ஒலித்தது. இந்தக் கூட்டத்தினர் மக்காவிலிருந்து ஒருவர் பின் ஒருவராக நெருங்கிக் கொண்டிருந்தனர். ஒரே நிறத்திலான இஹ்ராம் உடை தரித்த... பாதையின் புழுதி படிந்த... கண்ணீர் வழிந்தோடும் கண்களுடனான இந்த ஹாஜிகள், அல்லாஹ்வின் தோழர், நபிமார்களின் தந்தை இப்ராஹீம் (அலை) அவர்களது கைகளினால் கட்டப்பட்ட... பூமியில் தனது அடியார்களுக்கான புகலிடமாக அல்லாஹ் பிரகடனப்படுத்திய அந்த சங்கைக்குரிய அல்லாஹ்வின் இல்லத்தினது பராமரிப்பில் தம்மை ஈடுபடுத்திக் கொண்டு, அதனை தவாஃப் செய்து கொண்டிருந்தார்கள்.

நபி (ஸல்) அவர்கள், கடல் போன்ற ஹாஜிகளின் பெருக்கத்தினால் நிரம்பியிருந்த மஸ்ஜிதுல் ஹராமின் பக்கம் பார்வையை செலுத்தினார்கள். அவர்கள் அனைவரும், முஃமின்கள் எல்லோரும் சகோதரர்கள் என்ற ரீதியில் அல்லாஹ்வுக்கான சகோதரத்துவத்துவத்துடன், நெருக்கமான மலக்குகள் போன்று, பயபக்தியுடனும் பணிவுடனும் தொழுகை, பிரார்த்தனை, மற்றும் வணக்கங்களில் மூழ்கியிருந்தனர்.

இந்த மகத்தான நிகழ்வையிட்டு, மகிழ்ச்சியினதும் நிம்மதியினதும் அடையாளங்கள் நபி (ஸல்) அவர்களது முகத்தில் தென்பட்டன. அவர்கள், இந்த நிஃமத்துக்காக அல்லாஹ்வைப் புகழ்ந்து துதி செய்து கொண்டிருந்தார்கள். தமது தூதுத்துவத்தை பரிபூரணமான முறையில் நிறைவேற்றுவதற்கான சக்தியை அவர்கள் பெற்றுவிட்டிருந்தார்கள். ஆயினும், இவற்றோடு, அவர்களது முகத்தில், கவலையினதும் சஞ்சலத்தினதும் பிரதிபலிப்பும் காணப்பட்டது. அப்போதுதான் ஏற்பட்டதாக அல்லாமல், குறிப்பிட்ட காலத்திற்கு முன்பிருந்து அவர்களில் வெளியாகிக் கொண்டிருந்த அந்த நிலையானது, அவர்களது செழிப்பான இதழ்களில் இருக்கும் புன்முறுவலையும் நபித்துவ மலர்வையும் மறைக்கக் கூடியதாக வியாபித்திருந்தது.

அவர்கள், தமது மரணத்திற்குப் பின்னுள்ளவற்றையிட்டு சிந்தனை வயப்பட்டிருந்தார்கள். இந்த சமூக ஒற்றுமை சீர்குலைவதையும் அதிலேயுள்ள சகோதரத்துவத்தின் உயிர் நீங்கி விடுவதையும் முஸ்லிம்கள் தமது முன்னைய அறியாமைக் காலநிலைக்கே மீண்டும் திரும்பிவிடுவதையும் எண்ணி நபியவர்கள் அச்சம் கொண்டிருந்தார்கள்.

தமது முயற்சிகளை அழிவிலிருந்து பாதுகாக்கக்கூடிய நீதமான, அறிவுமிக்க ஓர் இமாமின் தலைமைத்துவத்தின் பாலுள்ள தமது சமூகத்தின் அவசியத் தேவையையும் அவர்கள் நன்கறிந்திருந்தார்கள்.

ஆம், சுமார் கால்நூற்றாண்டு காலமாக மூழ்கியிருந்த அவர்களது முயற்சி— பலமான, வன்மையுள்ள அம்முயற்சிகள் அழியும் நிலையை அணுகியிருந்தன. அவர்களுக்குப் பின் சமூகத்திற்கு நேர்மையான தலைமைத்துவம் கிடைக்கும் என்ற நம்பிக்கையில்லையென்றால், இறுக்கமான அழிவின் பாலான பயணம் அச்சமூகத்தைத் தலைமை தாங்கும்.

நபி (ஸல்) அவர்கள், தமது செழிப்பான வாழ்க்கை முழுவதிலும், சிறிய பயண காலத்திற்காக மதீனாவை விட்டு வெளியேறும் போதெல்லாம், தமது பொறுப்புகளை பொருத்தமான ஒரு மனிதரிடம் ஒப்படைக்கக்கூடியவர்களாகவும் அவருக்கு வழிப்படுமாறும் அவருடைய கட்டளைகளை அமுல்படுத்துமாறும் முஸ்லிம்களைப்

பணிக்கக்கூடியவர்களாகவும் இருந்தார்கள். நபியவர்கள், ஒருபோதும், மதீனா முஸ்லிம்களை தாம் விரும்பியவாறு நடந்து கொள்வதற்கேற்றாற் போல் சுயவிருப்புத் தேர்வில் விட்டுச் செல்லவில்லை. அவ்வாறிருக்க, நபியவர்கள், தமது மறைவுக்குப் பின் தமது சமூகத்தை இச்சைகளினதும் பாரபட்ச நிகழ்வுகளினதும் கைகளில் விட்டு விட்டுச் சென்றார்கள் என வர்ணிக்க முயல்வது எவ்வாறு சாத்தியமாகும்?

இவ்விடயத்தை நபியவர்கள் நன்கறிந்திருந்தார்கள். மேலும், இந்த இடம் யாருக்குரியது? இதனை சிறப்பாக சாத்தியமாக்கக்கூடியவர் யார்? என்பதையும், நபியவர்களின் கிலாபத்தை தனக்கு மட்டுமே கொண்டுள்ள அந்த மனிதர் யார் என்பதையும் அவர்கள் நன்கறிந்திருந்தார்கள்.

இதனைத்தான், நபியவர்களின் நெருங்கிய உறவினர்களான குறைஷி குல முக்கியஸ்தர்களின் சமூகத்தில் நபி (ஸல்) அவர்கள் குறிப்பிட்டார்கள்; "நிச்சயமாக இவர் என்னுடைய சகோதரர், என்னுடைய பின்னுரிமையாளர், உங்கள் மத்தியில் என்னுடைய பிரதிநிதி. அவருக்கு வழிப்பட்டு, அவருடைய சொல்லை செவிமடுங்கள்"

அவர்தான், இமைப்பொழுதேனும் அல்லாஹ்வுக்கு இணைவைக்காத, எந்தவொரு சிலைக்கும் தலைசாய்க்காத தூய்மையும் பரிசுத்தமும் மிக்க மனிதர்.

அவர், போர்களில் தன்னை தானமீந்தவர், நபி (ஸல்) அவர்களுக்காக தன்னுயிரை அர்ப்பணித்தவர். இவையனைத்தும், இஸ்லாத்திற்கான உதவியாகவும், உயர்வும் சகல நிலைகளிலுமான பாதுகாப்பும் கொண்ட அதன் கொடியை உயர்த்துவதற்கான சேவையாகவுமே அமைந்திருந்தன.

அவர்களது பிரவகிக்கும் அறிவு, அல்லாஹ்வின் தூதருடைய அறிவிலிருந்து பெறப்பட்டதாகும். நபிகளாருடைய தீர்ப்புக்குப் பின் முதலாவது சிறந்த தீர்ப்பு அவர்களுடையதுதான். பிரபலமாக அறியப்பட்ட அவர்தான் ஹஸ்ரத் அலி இப்னு அபீதாலிப் அவர்கள்.

ஹஜ்ஜுடைய காலம் முடிவுற்றது- மனிதர்கள் அனைவரும் பிரிந்து சென்றனர்... ஒவ்வொருவரும் தத்தமது நகரங்களையும்,

குடும்பத்தினரையும் நோக்கியவாறு... பாலைவனத்தில் திடீரென அது இடம்பெற்றது...

நபி (ஸல்) அவர்களின் சப்தம், முஸ்லிம்கள் அனைவரையும் திரும்பி வருமாறு அழைத்தது. என்ன நடந்தது? ஹஸ்ரத் ஜிப்ரீல் (அலை) அவர்கள், நபியவர்களிடம் வந்து, அல்லாஹ்வின் வசனத்தை எத்திவைத்தார்கள்: "தூதரே! உம் இறைவனிடமிருந்து உமக்கு அருளப் பெற்றதை அறிவித்து விடும். நீர் அவ்வாறு செய்யாவிடில், அவனுடைய தூதை நீர் நிறைவேற்றியவராக மாட்டீர். மனிதர்களிலிருந்து அல்லாஹ், உம்மை இரட்சித்துக் காப்பாற்றிக் கொள்வான். நிச்சயமாக அல்லாஹ் நிராகரிக்கும் மக்களை நேரான வழியில் செலுத்தமாட்டான்" (அல்மாயிதா - 67)

கடினமான வார்த்தைப் பிரயோகத்தினால் அல்லாஹ் தனது நபியுடன் உரையாடிய இந்த விடயமானது, ஹஸ்ரத் அலி (அலை) அவர்களின் கிலாபத்திற்கான உத்தியோகபூர்வ பிரகடனமாக அமைந்திருந்தது. ஏனெனில், நபி (ஸல்) அவர்கள், இவ்விடயத்தை நினைவுகூர்வோரை தடுக்கக்கூடியவர்களாக இருந்து வந்தார்கள். ஏனெனில், இவ்விடயமானது - அதற்கான பொருத்தமான சூழலை எதிர்பார்த்துக் கொண்டிருக்க வேண்டிய அவசிய நிலையில் - முஸ்லிம்களிடையே கடுமையான பிளவும் முரண்பாடும் தோன்றுவதற்கு அது காரணமாக அமைந்து விடும் என்று அச்சம் கொண்டிருந்தார்கள். இந்த அல்குர்ஆன் வசனம் இறங்கியதன்பின், அந்த பொருத்தமான சூழல் தற்போது தயாரானது... எனவே, நபி (ஸல்) அவர்கள், கற்கள் நிறைந்த எரியும் ஹிஜாஸ் பாலைவனத்தில் கதீர்கும் எனுமிடத்தில், இஸ்லாத்தின் உயிரும் அதன் உறுதியும் தெளிவாகும் வண்ணம், முஸ்லிம்கள் அனைவரையும் ஒன்றிணைத்தார்கள். அதுதான் கிலாபத்துடைய விடயமாகும்.

தாம் எதற்காக இவ்வாறு ஒன்றிணைக்கப்பட்டுள்ளோம்? எந்த முக்கிய விடயம் நிகழ்ந்துள்ளது என்பதை மனிதர்கள் எவரும் அறிந்திருக்கவில்லை. எனினும், உடனடியாக ஜமாஅத் தொழுகைக்கான அழைப்பு விடுக்கப்பட்டு, ளுஹர் தொழுகை நிறைவேற்றப்பட்ட பின், நபி (ஸல்) அவர்கள், வானத்தினளவைப் போன்று அதிகரித்திருந்த அந்தக் கூட்டத்தின் மத்தியில் எழுந்து

வந்தார்கள். ஒட்டகத்தின் மேலிருக்கையினால் தயார் செய்யப்பட்டிருந்த மிம்பரின் மீது ஏறியவர்களாக நின்றார்கள்.

உஷ்ணம் நிறைந்த அந்த ஹிஜாஸ் பாலைநிலமெங்கும் அமைதி கூடாரமிட்டிருந்தது. நபி (ஸல்) அவர்கள் அந்த அமைதியைக் கிழித்து தமது நிலையான வசனங்களூடாகக் கூறினார்கள்:

"மனிதர்களே! ஒவ்வொரு நபியும், தமக்கு முன்னாலிருந்தவரின் ஆயுளில் அரைவாசியளவே வாழ்ந்துள்ளார்கள் என அல்லாஹ் எனக்கு அறிவித்துள்ளான். நான் அழைக்கப்படுவதையும் அதற்கு பதிலளிக்க வேண்டியிருப்பதையும் உணர்கின்றேன். நீங்கள் பொறுப்பாளர்கள். நீங்கள் என்ன கூறுவீர்கள்?"

மக்களனைவரும், "நிச்சயமாக தாங்கள் பிரசாரம் செய்தீர்கள்; உபதேசம் புரிந்தீர்கள்; முயற்சி மேற்கொண்டீர்கள் என்று நாம் சாட்சி கூறுவோம். அல்லாஹ் தங்களுக்கு நற்கூலி வழங்குவானாக"

நபியவர்கள் மீண்டும் அவர்களை நோக்கி, "அல்லாஹ்வையன்றி வணக்கத்திற்குரியோன் வேறு யாருமில்லையென்றும் நிச்சயமாக முஹம்மத் அவர்கள் அந்த அல்லாஹ்வுடைய அடியாரும் தூதருமாவார்கள் என்றும் அல்லாஹ்வுடைய சுவர்க்கம் உண்மையானது, அவனது நரகம் உண்மையானது, மரணம் என்பது உண்மையானது, மறுமை நாள் ஐயமின்றி வரக்கூடியது, அல்லாஹ் கப்றில் உள்ளவர்களை எழுப்புவான் என்றும் சாட்சியம் கூறமாட்டீர்களா?" என்று வினவினார்கள். அதற்கவர்கள், "ஆம். நாம் அவற்றை சாட்சியம் கூறுகின்றோம்" என்று கூறினர். நபியவர்கள், "அல்லாஹ்வே! இதற்கு நீயே சாட்சியாக இருந்து கொள்" என்று பிரார்த்தித்தார்கள்.

இதைச் சொன்னவுடன், நபி (ஸல்) அவர்கள், ஹஸ்ரத் அலியின் கரத்தைப் பிடித்து, இருவரதும் அக்குள் பகுதி வெளித்தெரியும் படியாக மேலுயர்த்தியவாறு கேட்டார்கள்: "மனிதர்களே! மனிதர்களில் முஃமின்களுக்கு அவர்களது ஆன்மாவை விடவும் உயர்ந்தவர் யார்?" அதற்கவர்கள், "அல்லாஹ்வும் அவனது தூதருமே நன்கறிந்தவர்கள்" என்று

கூறினர். நபியவர்கள் கூறினார்கள்: "நிச்சயமாக அல்லாஹ் எனது எஜமான். நான் முஃமின்களின் பொறுப்பாளன். நான் முஃமின்களுக்கு அவர்களது ஆன்மாக்களை விட உயர்ந்தவன். ஆகவே, நான் யாருக்கெல்லாம் பொறுப்பாளனாக இருந்தேனோ, அவர்களுக்கு அலி பொறுப்பாளராவார். (இதனை மூன்று முறை கூறினார்கள். இப்னு ஹம்பலுடைய அறிவிப்பில் நான்கு தடவைகள் கூறினார்கள்) பிறகு கூறினார்கள்: "அல்லாஹ்வே! என்னுடைய பொறுப்பாளரை நீ பாதுகாப்பாயாக, அவருடைய எதிரிகளை நீயும் எதிரியாக்கிக் கொள்வாயாக, அவரை விரும்புவோரை நீயும் விரும்புவாயாக. அவரை கோபப்படுத்துவோரை நீயும் கோபிப்பாயாக. அவருக்கு உதவி புரிவோருக்கு நீயும் உதவி புரிவாயாக. அவரை தாழ்த்துவோரை நீயும் தாழ்த்துவாயாக. எப்போதும் அவருடன் உண்மை சுற்றிக் கொண்டிருக்கச் செய்வாயாக. மனிதர்களே! இதனை இங்கு சமுகம் தந்துள்ளவர்கள், சமுகம் தராதோருக்கு எடுத்துச் சொல்லவும்"

அதன்பின், உடனடியாக ஜிப்ரீல் (அலை) அவர்கள் அல்லாஹ்வின் திருவசனத்துடன் இறங்கினார்கள்: "இன்றைய தினம் உங்களுக்கு உங்களுடைய மார்க்கத்தை பரிபூரணமாக்கி வைத்துவிட்டேன். உங்களுக்காக இஸ்லாம் மார்க்கத்தையும் தேர்ந்தெடுத்து உங்களுக்கு அருட் செய்து அங்கீகரித்துக் கொண்டேன்" (அல்மாயிதா - 3)

நபி (ஸல்) அவர்கள் கூறினார்கள்: "மார்க்கத்தைப் பூரணப்படுத்தி, அருட்கொடைகளை முழுமையாக்கிய அல்லாஹ் மிகப் பெரியவன். இறைவனின் திருப்தி எனது தூதுத்துவத்தில் இருக்கின்றது. எனக்குப் பின் தலைமைப் பொறுப்பு அலிக்கு உரியதாகும்"

இதன்பின், கூட்டத்தினர் அனைவரும் ஹஸ்ரத் அலி அவர்களுக்கு வாழ்த்துத் தெரிவிக்கத் தொடங்கினர். இவ்வாறு வாழ்த்துத் தெரிவித்தவர்களுள் மூத்த ஸஹாபாக்களான அபூபக்கர், உமர் ஆகியோரும் இருந்தனர். அவர்கள், ஹஸ்ரத் அலியைப் பார்த்துக் கூறினர்: "அபூதாலிபின் புதல்வரே! வாழ்த்துக்கள், வாழ்த்துக்கள். எங்களதும் ஒவ்வொரு முஃமினான ஆண், பெண்ணினதும் தலைவராக நீங்கள் ஆகிவிட்டீர்கள்"

## கதீருடைய ஹதீஸ் அறிவிப்பாளர்கள்

கதீருடைய ஹதீஸின் அறிவிப்பாளர்களின் எண்ணிக்கை சுமார் ஓர் இலட்சத்து இருபதாயிரத்தையும் தாண்டியுள்ளது. 'சமுகமளித்தோர், சமுகம் தராதோருக்கு இதனை எத்திவையுங்கள்' என்ற நபிகளாரின் கூற்றை செயலில் கொண்ட முஸ்லிம்களினது கணக்கெடுப்பின் படி, இந்த எண்ணிக்கை என்பது இயற்கையானதாகும். அத்தோடு, இந்த நிகழ்வானது, அவ்வருடத்திலான ஹஜ் பயண நிகழ்வுகளில் முக்கியமான ஒன்றாக அமைந்திருந்தது. அதை அறிவிப்பதும் அதைப் பற்றிப் பேசுவதும் மிகவும் இயற்கையான ஓர் அம்சமாகும். அதன் விசேடமான முக்கியத்துவம் காலத்திற்குக் காலம் பரவிவந்தது. அதாவது, இவ்விடயமானது, சில குறிப்பிட்ட காலம் பேச்சுவாக்கில் இருந்து பின்னர் மறந்து விடப்படக்கூடிய சாதாரண நிகழ்வுகளைப் போன்று அமைந்திருக்கவில்லை.

இந்த மாபெரும் நிகழ்வு இடம்பெற்ற அன்றைய நாளிலும், அதற்கு இருபத்தைந்து வருடங்கள் கடந்த பின்னரும் - அதாவது, ஸஹாபாக்களில் அதிகமானோர் மரணித்து சொற்பமானோரே எஞ்சிய சந்தர்ப்பத்தில் - ஹஸ்ரத் அலி அவர்கள், மஸ்ஜிதுல் கூபாவில் வைத்து, நபி (ஸல்) அவர்களிடமிருந்து கதீருடைய ஹதீஸை செவிமடுத்தவர்களை, அதனைக் கூறும் படியாக வேண்டிக் கொண்டார்கள். அக்கூட்டத்திலிருந்து முப்பது நபர்கள் எழுந்து, அந்த ஹதீஸை எடுத்துக் கூறினார்கள்.

முஆவியாவுடைய மரணத்திற்கு இரண்டு வருடங்களுக்கு முன்னர், அதாவது ஹிஜ்ரி 58 அல்லது 59ஆம் ஆண்டில் இமாம் ஹுஸைன் அவர்கள், மினாவில் வைத்து பனூஹாஷிம்களையும் அன்ஸாரீன்களையும் ஏனைய ஹாஜிகளையும் ஒன்று சேர்த்தார்கள். அந்தக் கூட்டத்தாரைப் பார்த்துக் கேட்டார்கள்: "அல்லாஹ்வின் மீது சத்தியம் செய்கிறேன், கதீர்கும்முடைய

நாளில், நபி (ஸல்) அவர்கள், ஹஸ்ரத் அலியின் தலைமைத்துவத்தை உறுதிப்படுத்தியதையும் சமுகமளித்தோர் சமுகம் தராதோருக்கு எத்திவைக்கும் படியாகப் பணித்ததையும் நீங்கள் அறிவீர்களா?" என்று கேட்டார்கள். அப்போது அவர்கள் அனைவரும், "அல்லாஹ்வின் மீது ஆணையாக ஆம்" என்று கூறினார்கள்.

அஹ்லுஸ்ஸுன்னா உலமாக்கள், தமது கிரந்தங்களில், இந்த ஹதீஸைக் கேட்டு அறிவிப்பு செய்த நூற்றுப் பத்து ஸஹாபிகளின் பெயர்களைப் பதிவு செய்துள்ளனர். அதேவேளை, சுன்னாவின் மீது மிக்க ஞானமுள்ள அறிஞர்களில் பலர், இந்த ஹதீஸுக்கென தனியான பல நூற்களையும் கோர்வை செய்துள்ளனர்.

## ஹதீஸின் பொருள்

இந்த ஹதீஸிலுள்ள மௌலா, வலீ என்ற சொற்பதங்கள், இஸ்லாமிய சமூகத்தின் தலைவர், கலீபா என்பதையே குறிக்கின்றன என்பதை அனைத்து ஆதாரங்களும் தெளிவுபடுத்தியுள்ளன. பிறிதொரு கருத்தின் பால் இதனை இணைப்பது சாத்தியமற்றதாகும். அதற்கான ஆதாரங்களாவன;

1) நபி (ஸல்) அவர்கள், இந்த ஹதீஸை வெளிப்படுத்தும் விடயத்தில் தயக்கம் கொண்டிருந்தார்கள் என்பதையும், கடினமான வார்த்தைப் பிரயோகத்தினூடாக, மேற்கூறிய தெளிவான கட்டளை வரும் வரை நபியவர்கள் அதனை மேற்கொள்ளவில்லை என்பதையும் ஏற்கனவே அறிந்தோம்.

இந்நிலையில், நபிகளாரின் இந்தக் கூற்றின் நோக்கம், வெறுமனே நபியவர்களுக்கும் ஹஸ்ரத் அலிக்கும் இடையிலான நெருக்கத்தை குறிப்பிடுவதே என்று நாம் கூற முடியுமா?

இதுதான் நோக்கமாகவும் நாட்டமாகவும் இருந்திருப்பின், அதனை வெளியிடுவதில் நபியவர்கள் அச்சம் கொண்டிருந்தது எதற்காக? ஏன் இது, முஸ்லிம் சமூகத்தின் ஒற்றுமையையும் சகோதரத்துவத்தையும் பலவீனப்படுத்த வேண்டும்? அதுமட்டுமன்றி, அவர்கள் இருவருக்கும் இடையிலான நெருக்கம் என்ற அம்சம், ஒரு திசையில் சூரியனின் உஷ்ணமும் மறுபுறத்தில் பாலைவன சுடுமணலுமாக உள்ள கற்களடர்ந்த

எரியும் பாலைவனப் பூமியில், தமது உடைகளின் ஓரங்களை பாதங்களுக்குக் கீழாகவும், சிலர் தலைக்கு மேலாகவும் பிடித்துக் கொண்டிருக்கும் நிலையில், வெறுமனே நபியவர்களுக்கும் ஹஸ்ரத் அலிக்கும் இடையிலான நெருக்கம் ஹாஜிகளை ஒன்று சேர்த்து வைக்கத் தகுதி பெறுமா?

2) "நான் யாருக்கெல்லாம் பொறுப்பாளனாக இருந்தேனோ, அவர்களுக்கெல்லாம் அலி பொறுப்பாளராக இருப்பார்" என்று நபி (ஸல்) அவர்கள் கூறுவதற்கு முன், தாம் முஃமின்களுக்கு அவர்களது ஆன்மாவை விடவும் உயர்ந்தவர் என்ற விடயத்தை முஸ்லிம்களிடத்தில் உரையாடிப் பெற்றிருந்தார்கள்.

இது, நபி (ஸல்) அவர்கள், ஹஸ்ரத் அலி அவர்களுக்கு வழங்கிய விலாயத் எனும் பொறுப்பு, அல்லது தலைமைத்துவம் என்பது, நபியவர்களுக்கே உரிய சுயதலைமைத்துவமாகும் என்பதை தெளிவாக அறிவிக்கின்றது.

இந்த விலாயத், நட்பு ரீதியான நெருக்கமோ, அன்பின் பிரதிபலிப்போ இன்றி, அது பொதுவான, அனைத்துக்குமுரிய பூரண தலைமைத்துவமாக இருக்கின்றது. அது அன்பையும் இரக்கத்தையும் பொதிந்ததாக இருக்குமானால், நபியவர்கள் முஃமின்களிடத்தில் எப்போதும் இரக்கமுள்ளவர்களாகவும் அன்புள்ளவர்களாகவுமே உள்ளார்கள் என்பது குறிப்பிடத்தக்கது.

3) ஹஸ்ஸான் இப்னு தாபித், நபிகளாருடைய அனுமதியுடன் கதீருடைய நிகழ்வை ஒரு கவிதையாக வடித்தார். அந்தக் கவிதை, நபியவர்களால் அறியப்பட்ட நிலையில், அவர்களது அங்கீகாரத்துடன் பல இடங்களுக்கும் பரந்து வியாபகம் பெற்றது.

ஹஸ்ஸானுடைய கவிதையில், ஹஸ்ரத் அலியினுடைய கிலாபத்தும் இமாமத்தும் தெளிவாக குறிப்பிடப்பட்டுள்ளன. இவற்றோடு, அந்தக் கவிதையில், மௌலா என்ற சொற்பதத்தின் விளக்கத்தை தவறாகக் குறிப்பிட்டதாகக் கூறிக் கொண்டு, எந்தவொரு எதிர்ப்பாளரும், அந்தப் பெருந்தொகையான கூட்டத்திலிருந்து மறுப்புத் தெரிவிக்க முன்வரவில்லை. மாறாக, அனைவரும் அந்தக் கவிதையைப் புகழ்ந்து மெச்சக்கூடியவர்களாகவே இருக்கின்றார்கள். அக்கவிதையிலிருந்து சில வரிகள்:

"அவருக்கு நபி சொன்னார்,
அலியே எழுந்திரும்,
நிச்சயமாக நான்
எனக்குப் பின்
இமாமாகவும், வழிகாட்டியாகவும்
உம்மைத் திருப்தி கொண்டேன்.
எவருக்கெல்லாம் நான்
தலைவராக இருந்தேனோ,
அவர்களுக்கு இனி இவரே தலைவர்
ஆகவே, அவரை
உண்மையான பற்றுதலுடன்
பின்பற்றி நடப்பீர்களாக"

ஹஸ்ரத் அலி அவர்களுக்குரிய இமாமத்தைச் சுட்டுவதாக, நபியவர்களின் கூற்றை ஹஸ்ஸான் விரிவாக்கம் செய்கின்றார். ஹஸ்ஸான் அறிந்து கொண்டதை, விளங்கிக் கொண்டவர்களிலிருந்து ஒருவரும் இதனை மறுத்துரைக்க முன்வரவில்லை.

4) நபி (ஸல்) அவர்கள் தமது பிரபலமான உரையை முடித்ததன் பின்னால், ஹஸ்ரத் அலி அவர்களுக்கு பெண்கள் உட்பட அனைவரும் வாழ்த்துத் தெரிவிப்பதற்காகவும் அவர்களுக்கு ஸலாம் கூறி, அவர்களிடம் விசுவாசப் பிரமாணம் செய்து கொள்வதற்காகவும் ஹஸ்ரத் அலியை அமரச் செய்வதற்கென ஒரு கூடாரத்தை அமைக்குமாறு ஏவினார்கள். இந்த அம்சமானது, தலைமைத்துவம், கிலாபத்துடனேயே பொருந்திச் செல்லக்கூடியது என்பதை தெளிவுபடுத்துவதாக அமைகின்றது.

5) நபி (ஸல்) அவர்கள் குறிப்பிட்டார்கள்: "எனக்கு வாழ்த்துத் தெரிவியுங்கள். நிச்சயமாக அல்லாஹ், நபித்துவத்தின் மூலமாக என்னை சிறப்பாக்கினான். இமாமத்தின் மூலமாக எனது குடும்பத்தினரை சிறப்பாக்கினான்"

இவ்வாறு, இந்த சான்றுகள் அனைத்தும் கதீருடைய ஹதீஸையும் அதில் எவ்வித ஐயத்திற்கும் இடமில்லை என்பதையும் தெளிவுபடுத்துகின்றன.

## தலைமைத்துவத்தின் தேவை

எப்போதும், மனித வர்க்கம், சமூகத்தின் வண்டியை இழுத்துச் செல்வதற்கான பொறுப்பை ஏற்கக் கூடிய தலைமைத்துவத்தின் பாலான தேவையின் தன்மையை உணர்ந்து கொள்கின்றது. இதனால், செயல் ரீதியான ஒரு தலைவரின் மரணத்திற்குப் பின், அவரது இடத்தில் பிறிதொருவரை நியமிக்க வேண்டிய அவசியத்தின் பால் ஒவ்வொருவரும் தேவையுறுகின்றனர். ஒரு சமூகம், குறிப்பாக்கப்பட்ட தலைவர் ஒருவரின்றி நிராதரவாக விடப்படுவது புத்திசாதுரியமான விடயமல்ல. ஏனெனில், அது சமூகத்தின் மத்தியில் பிளவையும் குழப்பத்தையுமே ஏற்படுத்தக் கூடியதாகும்.

இஸ்லாமிய சமூகமானது, இந்த மனித சமூகக் கட்டமைப்புகளில் ஒன்றாகும். நபிகளாரின் மறைவுக்குப் பின், அவர்களது நடைமுறைகளை பூரணப்படுத்திச் செல்லக்கூடியவரும், அவர் மீதே இஸ்லாத்தினதும் முஸ்லிம்களதும் இருப்பு நிலைபெறக்கூடியதுமான ஒரு தலைவரைக் குறித்த அவசியத்தை இஸ்லாமிய சமூகம் அடைந்து கொண்டது.

எனினும், தலைமைத்துவத்தின் பாலான தேவையென்பது பல்வேறு காரணிகளை உடையதாக இருக்கின்றது. தலைவர் என்பவருடைய தனித்துவங்களைப் பற்றிய முஸ்லிம்களின் கருத்துகள் பலதரப்பட்டவையாக உள்ளன. சிலரின் கருத்தாவது, ஓர் ஆட்சியாளர் இருப்பதன் நோக்கம், சட்ட நிகழ்வுகளை அமுலாக்கம் செய்வதும் ஆட்சியின் அமைப்பைப் பாதுகாப்பதுமாகும். இதனால், கலீபா என்பவர் முஸ்லிம்களின் புறத்திலிருந்து தேர்தல் மூலமாகவே தெரிவு செய்யப்பட வேண்டும் என்பதாகும்.

இந்த கருத்து, அஹ்லுப் பைத்தினரதும் அவர்களைப் பின்பற்றுவோரதும் சிந்தனைகளின் கருத்துக்கு முரண்படுகின்றது.

அவர்கள், அறிவார்ந்த, தத்துவார்த்த, அல்குர்ஆனிய மற்றும் அறிவிப்புகள் மூலமான சான்றுகளின் அடிப்படையிலும், நுட்பமானதும் தூரநோக்குடையதுமான கண்ணோட்டத்துடன் தீர்மானித்துள்ள விடயமாவது :

ஒரு முஸ்லிம் கலீபா, அவர் பல்வேறு துறைகளிலான மனித பூரணத்துவத்தைக் கொண்டிருப்பது அவசியமாகும். அதாவது, மனித சமூகத்தின் நேர்வழி, வழிகாட்டல், பொதுவான பரிபூரணத்துவம் என்பவற்றில் நபி (ஸல்) அவர்கள் ஆரம்பித்து வைத்த நடைமுறைகளை பூரணப்படுத்துவது ஒரு கலீபாவின் கடமையாகும்.

இதன்படி, இந்த தூதுத்துவத்தை மேற்கொள்ள முடியுமான அந்த தலைவர், அல்லாஹ்வின் புறத்திலிருந்து குறித்துரைக்கப்பட்டவராக இருப்பது அவசியமாகின்றது. மேலும், சமூகத்தின் பிரச்சினைகளை இனங்காண்பது, அவற்றை அடையாளப்படுத்துவது, அவற்றுக்கு வெற்றிகரமான நிவாரணங்களை முன்வைப்பது போன்றவற்றுக்கு சக்தி பெறுவதில் அவர் நபி (ஸல்) அவர்களைப் போன்று இருக்க வேண்டும். அவற்றுக்கான நிவாரணங்கள் உண்மையான தெய்வீக சட்டங்களிலிருந்து பெறப்பட்டிருக்க வேண்டும். இந்த சட்டங்கள் மட்டுமே மகிழ்ச்சிகரமான மனித வாழ்வை உறுதிப்படுத்த முடியுமானவையாக இருக்கின்றன. ஏனெனில், இவையனைத்தும் அல்லாஹ்வின் புறமிருந்து உள்ளவையாகும். அல்லாஹ், மனித ஆன்மாவின் தூண்டுதல்களையும் வேண்டுதல்களையும் அதற்கு ஏதுவான சட்டக்கோவைகளையும் நன்கறிந்துள்ளான்.

இதுதான், ஒரு தலைவரின் பாலான தேவைக்குரிய உண்மையான காரணியாகும். அதன்றி, அவர்கள் கூறுகின்ற, ஆட்சியின் நிர்வாகத்தை ஒழுங்குபடுத்துவது, அரசின் அமைப்பைப் பாதுகாப்பது போன்ற மேலோட்டமான காரணிகள் இதற்கு இருக்க முடியாது.

இங்கு, அஹ்லுல்பைத்தினரதும் அவர்களது கூட்டத்தாரினதும் கருத்துகளை சற்று சுருக்கமாக பரிமாறிக் கொள்வோம். நபி (ஸல்) அவர்களது பிரதிநிதியின் பாலான தேவையென்பது, ஒரு மனிதர் தன் சுயஆன்மாவின் மீது தேவைப்படுகின்ற காரணியாகும். அல்லது, கிலாபத்தானது

அவசியமானதாக உள்ள அடிப்படைகளை பூரணப்படுத்தக் கூடியதாக இருக்கும். இது பொதுவான நேர்வழி பற்றிய ஒரு வாசகமாகும். அதாவது, படைப்பினங்களில் உள்ள ஒவ்வொரு படைப்பினமும் பூரணத்துவத்தின் நிலையை எட்டக்கூடிய சாதனங்களை நம்பிக்கை கொண்டுள்ளன. ஆனாலும், வழிதவறாதிருப்பதற்காக நேர்வழியின் பால் மாத்திரம் அவை தேவையுடையனவாகின்றன.

புத்தி அதனை ஏற்றுக் கொள்ளாதிருப்பதென்பது இயற்கையானதே. ஏனெனில், புத்தியின் பார்வை வரையறுக்கப்பட்டதாகவே இருக்கின்றது. அத்தோடு, மனித சிந்தனையானது, அன்புக்குக் கட்டுப்பட்டதும் சிந்தனைப் பிறழ்வுகளையும் தவறுகளையும் வெளிப்படுத்தக் கூடியதுமாக உள்ளது. அது, நிம்மதியும் பயன்பாடும் உள்ள சட்டதிட்டங்களையோ, மார்க்க விதிமுறைகளையோ முன்வைக்க இயலாதது. இதனாலேயே நபிமார்களின் வருகை அவசியமாகின்றது. ஏனெனில், அவர்கள் அல்லாஹ்விடமிருந்து வரும் வஹியின் மூலமாக, சிறிய தவறுகள் கூட இன்றி, முக்கியமான இப்பணியை மேற்கொள்வதற்கான சாத்தியப்பாட்டை அடைந்து கொள்கின்றார்கள்.

இந்த ஆதாரம், மனிதர்கள் மத்தியில் ஒரு நபியின் இருப்பு அவசியம் என்பதை உறுதிப்படுத்துவது போன்றே, பூரணமான முறையில் வானத்தின் தூதுத்துவத்தை மனிதர்களுக்கு முன்வைக்கக்கூடியவரும் தனது செயற்பாடுகள், முன்னுதாரணமான நடைமுறைகள் மூலம் பூரணத்துவத்தின் படித்தரங்களின் பால் மனிதர்களை தலைமை தாங்கி வழிநடாத்தக் கூடியவருமான ஒரு தலைவரின் மூலம் தூதுத்துவத்தின் ஒப்பந்தம் நிலைபெற்றிருப்பதற்காக, பரிசுத்தமான ஓர் இமாமின் இருப்பு அவசியம் என்பதையும் உறுதிப்படுத்துகின்றது.

இந்த ஆதாரம், பரிசுத்தமான ஓர் இமாமின் இருப்பு அவசியம் என்பதை உறுதிப்படுத்துகின்றது. ஏனெனில், அவரின்றி, மனிதர்கள் தம்மில் மறைந்துள்ள, பூரணத்துவ நிலையை அடைவதற்காக அல்லாஹ் தமக்கு வழங்கியுள்ள சக்திகளைப் பயன்படுத்திக் கொள்ள முடியாதவர்களாகி விடுவர். இதன் கருத்து, மனிதர்களிலுள்ள சக்திகள் அனைத்தும்

வீணாகவும் தேவையற்றவையாக ஆகிவிடும் என்பதாகும். இவ்வாறான ஒரு நிலை அல்லாஹ்விடமிருந்து வெளியாக மாட்டாது. ஏனெனில், மனிதர்களுக்குத் தேவையற்ற சக்திகளை அவர்களில் ஏற்படுத்தி வைப்பதென்பது புத்திக்குரிய விடயமல்ல.

நிச்சயமாக, நபி (ஸல்) அவர்களின் பிரதிநிதி, அல்லாஹ்வினால் குறிப்பிடப்பட்டு நியமிக்கப்பட்டவராகவும் பாவங்கள், மற்றும் தவறுகளை விட்டும் பரிசுத்தமாக்கப்பட்டவராகவும் இருக்க வேண்டியது அவசியம் என்பதை இவ் ஆதாரம் சிறப்பாக தெளிவுபடுத்துகின்றது.

ஏனெனில், கலீபா என்பவர் அவ்வாறு இல்லையெனில், அவர், எல்லையற்ற தன் அறியாமையின் காரணமாக அதிகமான தவறுகளில் விழுந்து விடக்கூடிய நிலையைக் கொண்டிருப்பார். இறுதியில், பூரணமான மனித ஈடேற்றத்தின் இரகசியத்தை அடைந்து கொள்வதற்கும், மனிதர்கள் அமுல்படுத்தி பின்பற்றியொழுகி பூரணத்துவத்தை அடைந்து கொள்ளக்கூடிய சரியானதும் உண்மையானதுமான மார்க்கத்தை மனிதர்களுக்கு முன்வைப்பதற்கும் இயலாதவராக ஆகிவிடுவார்.

இதனால்தான், தான் நியமித்து, அந்தப் பொறுப்பான இடத்திற்குக் குறிப்பாக்கியவர்களை பின்பற்றுவதையும் அவர்களுக்கு வழிப்படுவதையும் அல்லாஹ் முஸ்லிம்களுக்கு கடமையாக்கியுள்ளான். அல்லாஹ் கூறுகின்றான்: "விசுவாசம் கொண்டவர்களே! அல்லாஹ்வுக்கு வழிப்படுங்கள். மேலும் அல்லாஹ்வின் தூதருக்கும், உங்களது காரியங்களுக்குப் பொறுப்பானவர்களுக்கும் வழிப்படுங்கள்" (அந்நிஸா - 59)

இங்கு, உலுல்அம்ர் (காரியங்களுக்குப் பொறுப்பானவர்கள்) என்ற சொல்லானது, ரசூலுக்கு வழிப்படுவதை கடமையாக்கியது போன்று, அவர்களுக்கு வழிப்படுவதையும் அல்லாஹ் கடமையாக்கியுள்ள, தமது அனைத்து நிலைகளிலும் விடயங்களிலும் அவர்களைப் பின்பற்றுவதை ஏவியுள்ள பொறுப்பாளர்களையே குறிக்கின்றது. நபி (ஸல்) அவர்களின் கிலாபத்திற்காக அல்லாஹ் குறிப்பாக்கியுள்ள பரிசுத்த இமாம்கள், தவறுகள், சுயநல நோக்குகள் என்பவற்றை விட்டுத் தூய்மையாக்கப்பட்ட இமாம்களாகவும் மனித சமூகத்திற்கு சத்தியத்தின் பால் நேர்வழி காண்பிக்கும் கடமையை

மேற்கொள்ளக்கூடியவர்களாகவும் இருக்கின்றனர். அதன்றி, தமது சொற்களிலும் செயற்பாடுகளிலும் ஆயிரம் தவறுகள் இருக்கக்கூடிய, அவர்களைப் பின்பற்றுவதன் மூலமாக மனித சமூகம் நிலையான பூரணத்துவத்தை அடைந்து கொள்ள முடியாத மன இச்சைகளுடையவர்களை இது குறிக்கவில்லை.

## நபி (ஸல்) அவர்கள் தமது பிரதிநிதியை குறித்துரைத்தார்களா?

நபி (ஸல்) அவர்கள், இஸ்லாத்திற்காக தம்மை முழுமையாக அர்ப்பணித்தார்கள். தூய இஸ்லாம் மார்க்கம் உலகில் பாதுகாக்கப்பட்டதாக நிலைத்திருப்பது அவசியம் என்பதை, ஏனையோரை விட அதிகமாக அவர்கள் அறிந்திருந்தார்கள். இவ்வாறான நிலையில், தமக்குப் பின்னுள்ள தமது பிரதிநிதியை முஸ்லிம்களுக்கு தெளிவுபடுத்தாமல், அவர்கள் இறையடி சேர்ந்திருப்பார்கள் எனக்கூறுவது சாத்தியமாகுமா?

நபி (ஸல்) அவர்கள், தமது புனித நபித்துவத்தின் ஆரம்பத்திலிருந்து இவ்விவகாரத்திற்கு அதிக முக்கியத்துவம் கொடுத்து வந்துள்ளார்கள். பல்வேறு இடங்களில் தமது பிரதிநிதி பற்றி தெளிவான முறையில் அறிவித்துள்ளார்கள். இது தொடர்பான நபியவர்களின் கூற்றுகள் பற்றி சிறப்பாக சிந்திக்கும் ஒவ்வொருவரும், அக்கூற்றுகள் அனைத்தும் ஹஸ்ரத் அலி அவர்களையும், அஹ்லுல் பைத்தினரையுமன்றி வேறு எவரையும் குறித்துரைக்கவில்லையென்பதை ஐயமின்றி அறிந்து கொள்வர். இவ்விடயம் தொடர்பான நபி (ஸல்) அவர்களின் முன்மாதிரியான கூற்றுகள் சிலவற்றை இங்கு முன்வைக்கின்றோம்.

1) நபி (ஸல்) அவர்கள், ஹஸ்ரத் அலி அவர்களைப் பார்த்துக் கூறினார்கள் : "நீங்கள், இம்மையிலும் மறுமையிலும் என்னுடைய பொறுப்பாளராக இருக்கின்றீர்கள்"

2) பொதுவான மக்கள் கூட்டங்களில், நபி (ஸல்) அவர்கள் பல தடவை கூறியதாக அறிஞர்கள் குறிப்பிடுகின்ற ஹதீஸ் : "நிச்சயமாக நான் உங்கள் மத்தியில் இரண்டு விடயங்களை விட்டுச் செல்கின்றேன். அவற்றைப் பின்பற்றிக் கொண்டிருக்கும் வரை நீங்கள் வழிதவற மாட்டீர்கள். அவை அல்லாஹ்வின் வேதமும் எனது (இத்ரத்) குடும்பத்தினரும்"

இங்கு இத்ரத் என்பது, நபி (ஸல்) அவர்களது குடும்பத்தினர்களான ஹஸ்ரத் அலியையும் அவர்களது பிள்ளைகளையுமே குறிக்கின்றது. ஏனெனில், நபி (ஸல்) அவர்கள், இவ்விடயத்தை தெளிவாக அறிவித்துள்ளார்கள். அவர்கள்தான் தவறுகளை விட்டும் தூய்மையாக்கப்பட்டவர்கள் என்றும் அவர்களைப் பின்பற்றுவது ஒரு போதும் வழிகேட்டின் பால் சேர்க்காது என்றும் நபியவர்கள் தெரிவித்துள்ளார்கள்.

3) ஹம்பலீ மத்ஹபின் இமாம் அஹ்மத் இப்னு ஹம்பல் குறிப்பிடுகின்றார்கள் : நபி (ஸல்) அவர்கள் ஹஸ்ரத் அலியைப் பார்த்துக் கூறினார்கள் : "எனக்குப் பின் நீங்கள்தான் ஒவ்வொரு முஃமினுக்கும் பொறுப்பாளராவீர்கள்"

4) அறிஞர்கள் குறிப்பிடுவதாவது: நபி (ஸல்) அவர்கள் தமது வாழ்வின் இறுதித் தருணத்தில் ஹஜ் கடமையை நிறைவேற்றியதன் பின்னர், பல்லாயிரக்கணக்கான முஸ்லிம்கள் மத்தியில் எழுந்து நின்று கூறினார்கள் : "நான் யாருக்கெல்லாம் பொறுப்பாளராக இருந்தேனோ, அவர்களுக்கெல்லாம் அலி பொறுப்பாக இருப்பார்"

5) நபி (ஸல்) அவர்கள், தமது பிரதிநிதிகள் அனைவரும் குறைஷி வம்சத்திலிருந்தே தோன்றுவார்கள் என்றும் அவர்கள் பன்னிரெண்டு கலீபாக்களாக இருப்பார்கள் என்றும் தெளிவாகக் குறிப்பிட்டுள்ள அறிவிப்புகள் மிக அதிகமாக உள்ளன. சில அறிவிப்புகளில், அந்த இமாம்களின் பெயர்களும் அவர்களது சிறப்பம்சங்களும் கூட குறிப்பிடப்பட்டுள்ளன.

நபி (ஸல்) அவர்களது வாழ்வின் இறுதி வருடத்தில் அவர்களிலிருந்து வெளியான சில முன்னுதாரண நிகழ்வுகள், நபிகளாருக்குப் பின் முஸ்லிம்களின் விடயத்தைப் பொறுப்பெடுத்துக் கொள்வது அவசியமாக உள்ள மனிதர் யார்? அவர் எப்படிப்பட்டவர்? என்பவற்றை சிறப்பாக தெளிவுபடுத்தக் கூடியவையாக அமைந்துள்ளன.

## கிலாபத்தில் ஆலோசனை

கிலாபத் என்பது, ஆலோசனையினதும் பெரும்பான்மை அபிப்பிராயங்களினதும் வழியில் பூரணப்படுத்தப்பட முடியும் என்று சில எழுத்தாளர்கள் உறுதி கொண்டுள்ளனர்.

ஆலோசனை பற்றி விதந்துரைக்கக்கூடிய அல்குர்ஆன் வசனங்கள் பலவற்றை இதற்கு ஆதாரமாகக் குறிப்பிட்டு, தேர்தல் என்பது, சமூகவியல் அடிப்படையினதும் இஸ்லாமிய அரசியலினதும் ஓர் அங்கம் என எடுத்துரைக்கின்றனர். இவர்கள் பின்வரும் விடயங்களை மறந்தவர்களாகவே இதனைக் கூறுகின்றனர்.

1) இமாமத் என்பது, நுபுவ்வத்தினுடைய அடிப்படை நிலையைப் பூரணப்படுத்தக் கூடியதாகும். நுபுவ்வத் என்பது தேர்தல் ரீதியானதாக அல்லாமல், குறித்துரைக்கப்படுவதாக அமைந்திருப்பது போல், நுபுவ்வத்தின் இடத்தை பிரதிநிதித்துவப்படுத்தக் கூடிய இமாமத்தும் குறித்துரைக்கப்படுவதாகவே அமைந்திருக்க வேண்டும்.

2) ஆலோசனை செய்வதென்பது, அல்லாஹ்வினால் விதிக்கப்படாத, சட்டங்கள் குறிப்பாக்கப்படாத விடயங்களில் மட்டுமே சாத்தியமாகும். ஆனால், ஏற்கனவே குறிப்பிட்டது போன்று, தெளிவான ஆதாரங்களின் அடிப்படையில் நபி (ஸல்) அவர்கள் தமது பிரதிநிதியை குறிப்பிட்டுச் சொல்லிவிட்டார்கள். இதன்பின் அவ்விடயத்தில் ஆலோசனை செய்வதற்கு எவ்வித சந்தர்ப்பமுமில்லை.

3) இவ்விடயத்தில் ஆலோசனை செய்வது சரியென்றே வைத்துக் கொண்டாலும், முஸ்லிம் சமூகத்தினுடையவும் புனித மார்க்கத்தினுடையவும் நிரந்தரம் நிலைபெறக்கூடிய இந்த விவகாரத்தில் மனிதர்கள் முழுமையான அறிவுடன் இருக்க வேண்டும் என்பதற்காக நபி (ஸல்) அவர்கள் அந்தத் தலைவருடையவும் தேர்ந்தெடுக்கப்படக் கூடியவருடையவும் நிபந்தனைகளை தெளிவாக விளக்கியுள்ளார்கள். பனூஆமிர், நபி (ஸல்) அவர்களிடத்தில் இஸ்லாத்தைத் தழுவிய போது, அவர்களில் ஒருவர் நபிகளாரிடம் கேட்டார்: "நாங்கள் ஒரு விடயத்திற்காக தங்களுக்கு பைஅத் செய்து, பிறகு உமது பிரதிநிதியை அல்லாஹ் வெளியாக்கினால், தங்களுக்குப் பிறகும் அந்த விடயம் தொடர்ந்திருக்குமா?" அதற்கு நபியவர்கள், "அந்த விடயம் அல்லாஹ்விடம் உள்ளது. அவன் தான் நாடியவாறு அதனை ஏற்படுத்துவான்" என்று கூறினார்கள்.

இந்த அறிவிப்பினதும் ஏனைய பல அறிவிப்புகளினதும் அடிப்படையில், நியாயமான கொள்கையாவது, நபி (ஸல்)

அவர்களது பிரதிநிதிகளாக அடையாளப்படுத்தப்படுபவர்கள் அனைவரும் அல்லாஹ்வின் புறமிருந்து குறித்துரைக்கப்பட்டவர்களாவர். மனிதர்கள், தமது வாழ்வின் அனைத்து விடயங்களிலும் பரிசுத்த இமாம்களான இந்த பிரதிநிதிகளின் பால் திரும்பியிருப்பதும் எவ்வித பிறழ்வுக்கும் உட்படாத அவர்களது உண்மையான மார்க்க வழிகாட்டல்களைக் கற்றுக் கொள்வதும் அவசியம் என்றும் அவர்கள் கருதுகின்றனர்.

இந்த கொள்கையானது, நபிகளாரின் குடும்பத்தினருடைய அறிவிலிருந்தும் பல புறங்களிலுமுள்ள வாழ்க்கை விவகாரங்கள் அனைத்துக்கும் பதிலைக் கொண்டிருக்கக்கூடிய ஞானங்கள், யதார்த்தங்கள், பொக்கிஷங்கள், சேமிப்புகள் என்பவற்றின் தொகுப்பிலிருந்தும் பயன்பெறக்கூடிய சந்தர்ப்பத்தை எமக்கு ஏற்படுத்தித் தந்துள்ளது. இதனால்தான், அஹ்லுல் பைத்தினரின் மத்ஹப் இஸ்லாமிய மத்ஹப்களில் செழிப்பும் தாக்கமும் மிக்கதாக உள்ளது.

## கிலாபத் நடைமுறை பற்றிய சுருக்கப் பார்வை

ஹஸ்ரத் அலி (அலை) அவர்களை கலீபாவாக நியமித்து, மனிதர்களுக்கு அதனை சென்றடையச் செய்யுமாறு அல்லாஹ் நபி (ஸல்) அவர்களுக்கு கட்டளை பிறப்பித்தான்.

இஸ்லாமிய அழைப்பு உதயமான பொழுதில், நபி (ஸல்) அவர்கள் தமது நெருங்கிய உறவினர்களை அழைத்து, அவர்களிடம் ஹஸ்ரத் அலியை சுட்டிக் கூறினார்கள். "நிச்சயமாக இவர் என்னுடைய சகோதரர்; என்னுடைய பின்னுரிமையாளர்; உங்கள் மத்தியிலான என்னுடைய பிரதிநிதி. ஆகவே அவரது பேச்சை செவிமடுத்து, அவருக்கு வழிப்பட்டு நடவுங்கள்"

நபி (ஸல்) அவர்கள், தபூக் யுத்தத்தை நோக்கிச் செல்லும் போது ஹஸ்ரத் அலியைப் பார்த்துக் கூறினார்கள்: "மூஸாவிடம் ஹாரூன் பெற்றிருந்த இடத்தைப் போல் நீங்கள் என்னிடம் அந்தஸ்து பெற்றுள்ளதை நீங்கள் திருப்தி கொள்ளவில்லையா? எனினும் நீங்கள் நபியில்லை. நீங்கள் கலீபாவாக இருக்கும் நிலையிலேயேயன்றி நான் இவ்வுலகை விட்டுச் செல்ல முடியாது"

நபி (ஸல்) அவர்களது வாழ்வின் இறுதி வருடத்தில், அல்லாஹ்வின் இல்லத்தைத் தரிசித்து ஹஜ்ஜுடைய கடமையை நிறைவேற்றிய பின், தமது இடத்துக்கு திரும்பிக் கொண்டிருக்கும் வழியில் கதீர்கும் எனுமிடத்தில், சுமார் ஓரிலட்சம் முஸ்லிம்களுக்கு முன்னால் நபியவர்கள் கூறினார்கள்; "நான் யாருக்கெல்லாம் தலைவராக இருந்தேனோ, அவர்களுக்கெல்லாம் அலி தலைவராக இருப்பார்"

இவ்வாறுதான், தமது வாழ்வின் இறுதி நொடிகளில், நபி (ஸல்) அவர்கள் தமது தோழர்கள், தம்மைப் பின்பற்றுபவர்கள், மற்றும் ஏனைய மனிதர்களுக்கு கூறினார்கள்; "நிச்சயமாக நான் அழைக்கப்படுவதையும் அதற்கு விடையளிக்க

வேண்டியுள்ளதையும் உணர்கிறேன். நான் உங்கள் மத்தியில் இரு பொக்கிஷங்களை விட்டுச் செல்கின்றேன். அவற்றைப் பற்றிப் பிடித்துக் கொள்ளும் வரை நீங்கள் வழிதவற மாட்டீர்கள். அவை, அல்லாஹ்வின் வேதமும் எனது இத்ரத்துமாகும். அல்லாஹ்வுடைய வேதமானது, வானத்திலிருந்து பூமி வரை நீட்டப்பட்டுள்ள கயிறாகும். இத்ரத் என்பது எனது குடும்பத்தினராகும். நிச்சயமாக அறிவும் இரக்கமும் உள்ள அல்லாஹ் எனக்கு அறிவித்தான், இவ்விரண்டும் ஹவ்ளுல் கௌஸரில் என்னை வந்தடையும் வரை ஒன்றையொன்று பிரியமாட்டாது. ஆகவே, அவ்விரண்டிலும் என்னைப் பின்பற்றி நடந்து கொள்ளுங்கள்."

இவ்வாறு, ஏனைய பத்து அறிவிப்புகளினூடாக நாம் அறிய முடிகின்றதாவது, நபி (ஸல்) அவர்கள் இவ்விடயத்தை உறுதிப்படுத்தியதோடு, இஸ்லாமிய சமூகத்தின் கடிவாளம் இயல்பான முறையில் ஹஸ்ரத் அலியின் கைகளில் ஆகியிருப்பதற்குப் பொருத்தமான சூழலை உருவாக்கவும் முனைந்தார்கள். இந்த அளவோடு அவர்கள் போதுமாக்கிக் கொள்ளவில்லை. நபியவர்கள், பல்வேறு சிறப்பான செயலெடுப்புகளை மேற்கொண்டமை, கிலாபத்தை அடைந்து கொள்வதற்காகவும் வழிமுறைகளை பிறழச் செய்வதற்காகவும் மேற்கொள்ளப்படும் திட்டங்கள் அனைத்தையும் தோல்வியடையச் செய்ய வேண்டும் என்பதற்காகவேயாகும்.

நபியவர்கள், பொருத்தமான, சக்தி வாய்ந்த இளைஞரான உஸாமா இப்னு ஸைதின் தலைமையில், ரோம் தேசத்துக்கு அனுப்புவதற்காக ஒரு படையைத் தயார் செய்தார்கள். அந்தப் படையணியுடன் சேர்ந்து கொள்ளுமாறு மதீனாவாசிகள் அனைவருக்கும் கட்டளையிட்டார்கள். முஹாஜிரீன்களும் அன்ஸாரீன்களும் இருந்த அந்தப் படையணியில் அபூபக்கர், உமர் போன்ற மூத்த ஸஹாபிகளும் உள்ளடங்கியிருந்தனர். நபியவர்கள், அந்தப் படையினரை மதீனாவை விட்டு வெளியேறுமாறு வேண்டியதோடு, உஸாமாவை அனுப்பும் பணியை அமுல்படுத்துவதன் அவசியத்தை தொடர்ந்து உறுதிப்படுத்திக் கொண்டேயிருந்தார்கள். தம்மிடம் வரும் ஒவ்வொருவரிடமும் நபியவர்கள், "உஸாமாவின்

படையனுப்புதலை அமுல்படுத்துங்கள்" என்றே கூறிக் கொண்டிருந்தார்கள்.

நபி (ஸல்) அவர்கள், கடினமான நோயினால் பீடிக்கப்பட்டு, தமது ஆயுளின் இறுதி நொடிகளைக் கழித்துக் கொண்டிருந்த நிலையில், அந்தப் படையணியைத் தயார் செய்ததும் அக்கால கட்டத்தில் அதன் தலைமைத்துவத்திற்கு உஸாமாவைத் தெரிந்தெடுத்ததுமான இவ் அமைப்பானது, முரண்பாடான உணர்வுகள், கிலாபத்தின் மீதான வேணவா என்பவற்றை மதீனாவிலிருந்து களைந்து, இஸ்லாமிய உலகின் தலைமைத்துவத்தை இயல்பான முறையில் ஹஸ்ரத் அலியின் கைகளில் ஒப்படைப்பதற்காகவே உருவாக்கப்பட்டிருந்தது. அத்தோடு, அனுபவ முதிர்ச்சி, மற்றும் முதுமை நிலை என்பன தலைமைத்துவத்திற்கான நிபந்தனையல்ல என்பதையும் நிச்சயமாக பொருத்தப்பாடு என்பதே அதற்கான நிபந்தனை என்பதையும் அனைவரும் அறிந்து கொள்ள வேண்டும் என்பதற்காகவும், மேலும், ஹஸ்ரத் அலியின் இளமைப் பருவம் கிலாபத்துடைய இடத்திலிருந்து அவர்கள் புறக்கணிக்கப்படுவதற்கு காரணமாக அமைந்து விடக்கூடாது என்பதற்காகவும், முரண்பாட்டாளர்களது எதிர்ப்புகளின் எண்ணத்தில் ஹஸ்ரத் அலியின் ஆவணத்தை எழுதுவதற்கு நபி (ஸல்) அவர்கள் சக்தி பெற வேண்டும் என்பதற்காகவும் இது உருவாக்கப்பட்டிருந்தது.

எனினும், முரண்பட்ட சிலர், உஸாமாவின் படையணியிலிருந்து விலகி, மதீனாவுக்குத் திரும்பி வந்தனர். அந்த சந்தர்ப்பத்தில் நபி (ஸல்) அவர்கள், தமது ஸஹாபிகள் அனைவரிடமும் வேண்டினார்கள்; "என்னிடத்தில் ஒரு எழுதுகோலையும் ஏட்டையும் கொண்டு வந்து தாருங்கள். நான் உங்களுக்கு ஒரு சட்டத்தை எழுதித் தருகின்றேன், அதைப் பின்பற்றிக் கொண்டிருக்கும் வரை நீங்கள் வழிதவற மாட்டீர்கள்" எனினும், அவர்களது ஸஹாபாக்களில் சிலர் அதனைப் புறக்கணித்தார்கள். வெறுக்கத்தக்க முறையில் விமர்சித்தார்கள். அந்த வீட்டிலே பேச்சும், சப்தமும் அதிகரித்தது. உமர் கூறினார்; "இவருக்கு வலி அதிகரித்து விட்டது. எங்களிடத்தில் அல்குர்ஆன் இருக்கின்றது. அல்லாஹ்வின் வேதம் மட்டும் எங்களுக்குப் போதுமானது"

இந்த நிகழ்வினால் நபி (ஸல்) அவர்கள் கடினமான வேதனைக்குட்பட்டார்கள். தாம் நாடியதை எழுத முடியாதென்பதையும், அது முரண்பாட்டை மேலும் அதிகரிக்கச் செய்யும் என்பதையும் அவர்கள் உணர்ந்ததோடு, தற்போதைய நிலை, இஸ்லாத்தின் அத்திவாரத்தையே அழித்துவிடுமளவு வலுப்பெற்று விடுமோ என அச்சமும் கொண்டார்கள். இதனால், அவர்களின் மூலமான தமது வேதனையையும் கஷ்டத்தையும் வெளிப்படுத்திய நபியவர்கள், “என்னை விட்டு எழுந்து சென்று விடுங்கள்” என்று காட்டமாகக் கூறினார்கள்.

## ஸகீபாவும் அதிலே இடம்பெற்றவையும்

நபி (ஸல்) அவர்கள், ஹிஜ்ரி பதினோராம் வருடம், ஸபர் மாதத்தின் இருபத்தியெட்டாம் நாளில் வபாத்தான போது, மதீனா முழுவதையும் கடினமான சோகம் ஆட்கொண்டது.

இதனிடையே, முஸ்லிம்களில் ஒரு கூட்டம், நபிகளாரின் உடலை அப்படியே விட்டுவிட்டு, ஸகீபா பனீசாயிதா எனுமிடத்தில் ஒன்று கூடி, அந்த முக்கியமான நேரத்தை கொள்ளையிட்டுக் கொள்ள முனைந்தனர்.

அன்ஸாரீன்கள், தமது பிரமுகர் ஸஅத் இப்னு உபாதா என்பவரை நபியவர்களின் பிரதிநிதியாக நியமிக்க நாடியிருந்தனர். விடயமறிந்து அவ்விடத்திற்கு விரைந்து சென்ற ஹஸ்ரத் அபூபக்கரும் ஹஸ்ரத் உமரும் இதற்கு உடன்படவில்லை. ஹஸ்ரத் அபூபக்கர் அவர்கள், தனது உரையில் முஹாஜிரீன்களின் உயர்நிலையையும் அவர்கள் இஸ்லாத்தில் முந்தியவர்கள் என்றும் அவர்களே நபியவர்களின் உறவினர்கள் என்றும் எடுத்துக் கூறி, முஸ்லிம்களின் தலைவர் முஹாஜிரீன்களிலிருந்தே தெரிவு செய்யப்பட வேண்டுமெனவும் தலைவருக்கு உதவியாக உள்ள அமைச்சர் அன்ஸாரீன்களிலிருந்து தெரிவு செய்யப்படலாம் எனவும் எடுத்துக் கூறினார். இங்கு, ஓர் அன்ஸாரி உத்வேகம் கொண்டெழுந்து, முஹாஜிரீன்கள், அன்ஸாரீன்கள் ஒவ்வொரு கூட்டத்தினரும் தமக்கென ஒவ்வொரு தலைவரை தெரிவு செய்து கொள்ள வேண்டும் என்று கூறினார். எனினும், ஹஸ்ரத் அபூபக்கரின் உரை அங்கு வந்திருந்த பலரில் தாக்கம் ஏற்படுத்தியமையினால், அந்த சபைக்கு சமுகம் தராதிருந்த ஏனைய முஹாஜிரீன்கள், அன்ஸாரீன்களை விட்டு விட்டு, முஹாஜிரீன்களிலிருந்து ஒருவரை தேர்ந்தெடுப்பதற்கு அவர்கள் தயாராகினர். முக்கியத்துவம் மிக்க இந்த இஸ்லாமிய விவகாரத்திலான தீர்மானத்தை எடுத்துக் கூறி, அனைத்து விடயங்களையும் தீர்மானிப்பவர்களாகவும் அவர்கள் மாறினர்.

ஹஸ்ரத் அபூபக்கரும் ஹஸ்ரத் உமரும் கிலாபத்தை பயன்படுத்திக் கொண்டார்கள். ஒருவர், மற்றவருக்கு அதனை முன்வைத்தனர். இறுதியில் அபூபக்கருக்கு உமர் பைஅத் செய்தார். அதன்பின், அந்த ஸஅத் பின் உபாதாவை தலைவரென எடுத்துக் கூறியவர்களும் அபூபக்கருக்கு பைஅத் செய்தார்கள். இவையனைத்தும், நபி (ஸல்) அவர்களின் குடும்ப உறவுதான் சிறப்புகளுக்கான அளவுகோல் என்பதையும் அபூபக்கரை விட நபியவர்களுக்கு மிக நெருக்கமானவரும் சகல வழிகளிலும் மிகவும் பொருத்தமானவரும் யார் என்பதையும் புறக்கணித்த நிலையிலேயே நிகழ்வுற்றன. இந்த பைஅத், ஸஅத் பின் உபாதாவுக்கும் அவருடைய தோழர்களுக்கும் தோல்வியாக அமைந்த அதேவேளை, ஹஸ்ரத் அபூபக்கருக்கும் ஹஸ்ரத் உமருக்கும் வெற்றியாக அமைந்தது. இதனை எதிர்த்த சிலர், முஸ்லிம்களின் கூட்டிணைப்புக்கு முரண்படக்கூடாது என்ற காரணத்தின் அடிப்படையில் இந்த பைஅத்தின் பால் நிர்ப்பந்திக்கப்பட்டார்கள்.

இந்நிலையில், அபூபக்கரும் உமரும் அவர்களிருவரது தோழர்களும் ஸகீபாவிலிருந்து வெளியாகி, நபி (ஸல்) அவர்களின் பள்ளிவாயலை நோக்கி நடந்தார்கள். தம்மை சந்தித்தவர்கள் அனைவரையும் அபூபக்கருக்கு பைஅத் செய்யும் படியாக அழைப்பு விடுத்துக் கொண்டேயிருந்தார்கள்.

நபி (ஸல்) அவர்களின் சிறிய தந்தை அப்பாஸ், அவரது பிள்ளைகள், சுபைர், ஹப்பாப் இப்னுல் முன்திர், மிக்தாத், அபூதர் கிப்பாரி, ஸல்மான் பார்ஸீ, அம்மார், பர்ரா பின் ஆஸிப், உபையிப்னு கஅப், உத்பா பின் அபீலஹப், காலித் பின் ஸயீத், ஹுஸைமா பின் தாபித், பர்வா பின் அம்ர் போன்றோரும், பனூஹாஷிம்கள் முஹாஜிரீன்களில் பெரியவர்கள், மற்றும் அன்ஸாரீன்கள் அனைவரும் திடீரென இவ்விடயத்தை அறிந்த போது, தாம் அறிவிலிகளாக்கப்பட்டு விட்டதை உணர்ந்தார்கள். திடுக்கம் அவர்களை ஆட்கொண்டது. நபி (ஸல்) அவர்களின் தெளிவான அறிவிப்புகள் இருந்த போதிலும் அவசரமாக, கிலாபத் அதன் பாதையிலிருந்து பிறழ்ந்து விட்டதையும் அது அஹ்லுல்பைத்தினருடைய கைகளிலிருந்து வெளியாகிச் சென்று விட்டதையும் தெளிவுபடுத்த முடியாது போனதன் பின்னர்,

அவர்கள் அந்த பைஅத்திலிருந்து தம்மைத் தடுத்துக் கொண்டார்கள்.

ஹஸ்ரத் அலி அவர்களின் வயதுக் குறைவையும் போதிய அனுபவமின்மையையும் கிலாபத் இழப்புக்கான காரணமாகக் கூறிய ஹஸ்ரத் அபூபக்கரின் உதவியாளர் அபூஉபைதாவுக்கான பதிலாக ஹஸ்ரத் அலி அவர்கள் இவ்வாறு கூறினார்கள்; "முஹாஜிரீன்களே! அல்லாஹ்! அல்லாஹ்!! முஹம்மத் (ஸல்) அவர்களுடைய ஆட்சியை, அவர்களது வீட்டிலிருந்து உங்களது வீடுகளுக்கு எடுத்துச் சென்று விடாதீர்கள். மனிதர்களில் நபிகளாரின் குடும்பத்தினருக்கு இருக்கக்கூடிய சிறப்பையும் உரிமையையும் பறித்து விடாதீர்கள். அல்லாஹ் மீது ஆணையாக, முஹாஜிரீன்களே! அஹ்லுல் பைத்தினராகிய நாங்கள், இவ்விடயத்தில் உங்களை விட மிகவும் உரிமை உள்ளவர்கள். எங்களிடத்தில் அல்லாஹ்வின் வேதத்தை ஓதக்கூடியவர்களும் அல்லாஹ்வின் மார்க்கத்தை நன்கு விளங்கியவர்களும் நபிகளாரின் வழிமுறைகளை தெளிவாக அறிந்தவர்களும் கண்காணிப்புப் பொறுப்புக்கு தகுதியானவர்களும் இருக்கின்றார்கள். அல்லாஹ் மீது ஆணையாக, அது எங்களிலே உள்ளதாகும். ஆகவே, நீங்கள் இச்சைகளைப் பின்பற்றாதீர்கள்; அவ்வாறு பின்பற்றினால் உண்மையை விட்டு வெகுதூரம் சென்று விடுவீர்கள்"

ஸகீபாவுடைய நாளில் ஹஸ்ரத் அபூபக்கருக்கு பைஅத் செய்யப்பட்டு, அந்த பைஅத் செவ்வாய்க்கிழமை பொதுவாக அனைவர் மீதும் புதுப்பிக்கப்பட்ட போது, ஹஸ்ரத் அலி அவர்கள் அவ்விடம் சென்று, ஹஸ்ரத் அபூபக்கரை நோக்கி, "எங்களுடைய விடயங்களை குழப்பத்திற்குள்ளாக்குகின்றீரா? எங்களுடைய உரிமைகளை நீர் கவனிக்க மாட்டீரா? ஆலோசிக்க மாட்டீரா?" என்று கேள்வி எழுப்பினார்கள். அப்போது அபூபக்கர், "உண்மைதான், எனினும் குழப்பம் ஏற்படும் என்பதற்காகவே இவ்வாறு செய்தேன்" என்று பதிலிறுத்தார். ஹஸ்ரத் பாத்திமா (அலை) அவர்கள் வபாத்தாகும் வரை பனூஹாஷிம்களில் எவரும் ஹஸ்ரத் அபூபக்கருக்கு பைஅத் செய்யவில்லை.

நபி (ஸல்) அவர்களது மறைவுக்கு முந்திய நிகழ்வுகளும் தொடர்ந்து வந்த சில தினங்களும் பலவழிகளிலும் கஷ்டமான,

நுணுக்கமான மேலாதிக்க நிலையையே எமக்குத் தெளிவுபடுத்துகின்றன. அவர்கள் ஸகீபா பனீஸாயிதாவில் ஒன்று கூடிய விடயம் பனூஹாஷிம்களுக்கும் மூத்த ஸஹாபாக்களுக்கும் ஏன் அறிவிக்கப்படவில்லை? நபி (ஸல்) அவர்கள், தமக்குப் பிறகுள்ள கலீபாவை குறிப்பிட்டிருக்கவில்லை என்றே வைத்துக் கொண்டாலும், இஸ்லாமிய உலகுடன் தொடர்புடைய ஒரு விவகாரத்தில், ஹஸ்ரத் அலி, அவர்களது தோழர்கள், பனூஹாஷிம்கள், மற்றும் ஸல்மான் பார்ஸீ, அபூதர், மிக்தாத் போன்ற மூத்த ஸஹாபாக்களின் ஆலோசனையின்றி தீர்மானம் நிறைவேற்றுவது எவ்வாறு சரியாகும்?

இவர்களெல்லோரும் ஹஸ்ரத் அலியை விட சிறப்பாக சிந்திக்கக்கூடியவர்களாகவா இருந்தார்கள்? ஹஸ்ரத் அலியின் விடயத்தில் நபி (ஸல்) அவர்கள் இவ்வாறு கூறியிருக்கின்றார்கள்:

"அலி, உண்மையுடன் இருப்பார். உண்மை, அலியுடன் இருக்கும். மறுமை நாளில் என்னுடைய ஹௌளுல் கௌஸரிடத்தில் வரும் வரை இவ்விரண்டும் ஒன்றையொன்று பிரியமாட்டாது"

"மனிதர்களில் மிகவும் சிறந்த தீர்ப்பாளர் அலி பின் அபீதாலிப்"

"நான் அறிவின் பட்டணம்; அலி, அதன் தலைவாசல்"

இவ்வாறிருக்க, ஏன் அவர்கள் ஹஸ்ரத் அலியை கலீபாவாக ஏற்று பைஅத் செய்யவில்லை? ஏன், இம்முக்கிய விடயத்தில் அவர்களுடன் ஆலோசனையும் செய்து கொள்ளவில்லை?

இதற்கு, ஹஸ்ரத் அலியின் குறைந்த வயதை காரணமாகக் கூற முடியுமா? நபி (ஸல்) அவர்கள், பொருத்தம், இறையச்சம் என்பவற்றையே முன்னணிக்கான தகுதிகளாக அமைத்திருக்கவில்லையா? இதற்காகவே, அபூபக்கர் போன்றவர்களை விடுத்து உஸாமாவை அவர்கள் முற்படுத்தினார்கள். அவ்வாறிருக்க, ஏன் பிறரை விட ஹஸ்ரத் அலி முற்படுத்தப்பட்டிருக்கக் கூடாது?

அவர்கள், இதற்கென பிறிதொரு காரணத்தையும் குறிப்பிட்டனர். அது, ஹஸ்ரத் அலி அவர்கள், இஸ்லாத்திற்கான யுத்தங்களில் ஓட்டிய இரத்தங்கள், அவர்களது கொடியின் கீழ்

ஒன்றிணைவதிலிருந்து பலரைத் தடுக்கக்கூடியதாக இருந்தது என்பதாகும்.

இக்காரணத்திற்காக சத்தியத்துக்கு முரண்படாது, ஹஸ்ரத் அலியை பின்பற்ற வேண்டும் என்று, உண்மையை நிராகரிப்பவர்கள் நிர்ப்பந்திக்கப்படுவதை வேண்டக்கூடிய அளவுகோல்கள் இருக்கின்ற நேரத்திலும் இவர்கள், ஹஸ்ரத் அலி தொடர்பாக, நபி (ஸல்) அவர்கள் மிகத் தெளிவாக குறிப்பிட்டிருந்த அறிவிப்புகள், தெளிவுரைகள் அனைத்தையும் மறந்தும் மறக்கச் செய்தும் விட்டார்கள்.

இது, சரியான காரணம் இங்கு இருந்திருப்பின், அல்லாஹ் ஹஸ்ரத் அலியை நபியவர்களின் கலீபாவாக தெரிவு செய்திருக்க மாட்டான் என்பதற்கான உயர் மதிப்பீடாகும்.

கேள்வி : எங்களுடைய நடுநிலையான முஸ்லிம் சகோதரர்கள் சிலர் கேட்கின்றனர்: நாம் கதீருடைய விவகாரத்தையும் ஹஸ்ரத் அலியின் கிலாபத்தை நிறுவும் ஆதாரங்களையும் நிராகரிக்கவில்லை. எனினும், தமது கிலாபத் காலப்பகுதியில், தமக்கு எதிராக செயற்பட்டவர்கள், தமது ஆட்சியைக் கைப்பற்ற எத்தனித்தவர்கள் ஆகியோருக்கெதிராக போர் செய்த ஹஸ்ரத் அலி அவர்கள், நபி (ஸல்) அவர்களது மறைவுக்குப் பின்னர், கிலாபத்திற்கான தமது உரிமைக்காக ஏன் போராட முன்வரவில்லை?

பதில் : ஹஸ்ரத் அலி அவர்கள் அபூபக்கருடைய ஆட்சியை ஏற்றுக் கொண்டிருக்கவில்லை. இதனால், அவருடைய ஜும்ஆ, மற்றும் கூட்டுத் தொழுகைகளுக்கு அவர்கள் சமுகம் தரவில்லை. பறிக்கப்பட்ட தமது உரிமையை மீட்டெடுப்பதற்காக மனிதர்களிடம் உதவி கோரினார்கள். இரவு நேரங்களில், அவர்கள், ஹஸ்ரத் பாத்திமா அவர்களுடன் இணைந்து அன்ஸாரி ஸஹாபிகளின் வீடுகளுக்குச் சென்று, அவ்விடயத்தில் தமக்கு ஒத்தாசை புரியுமாறு வேண்டுகோள் விடுத்தார்கள். எனினும், தாம் அபூபக்கருக்கு பைஅத் செய்து விட்டதை காரணமாகக் கூறி, அவர்கள் ஹஸ்ரத் அலிக்கான உதவியிலிருந்து பின்வாங்கிக் கொண்டனர். இவ்வாறே காலங்கள் கடந்தன.

அன்ஸாரீன்கள், இஸ்லாத்துடனான உடன்படிக்கை பற்றி அதிகம் பேசக்கூடியவர்களாக இருந்தார்கள். மரபுகளும்

அறிவுக்குப் புறம்பான பண்புகளும் அவர்களது ஆன்மாவின் ஆழத்தில் வேரூன்றியிருந்தன. இதனால், அபூபக்கருடைய பைஅத்தை - அது பொருத்தமற்றதாக இடம்பெற்றிருந்த போதிலும் - மீறுவதற்கும் ஹஸ்ரத் அலிக்கு உதவுவதற்கும் அவர்கள் இயலாதவர்களாக இருந்தனர்.

இந்நிலையில், நபி (ஸல்) அவர்களுடைய மறைவுக்குப் பின், தமது உரிமையைப் பெறுவதற்கான எந்த உதவியையும் ஹஸ்ரத் அலி அவர்கள் பெற்றிருக்கவில்லை. அதேவேளை, தமது உரிமையையும் இஸ்லாமிய உலகின் தலைமைத்துவத்தையும் பெறுவதில் பேராசை கொண்டவர்களாகவும் அவர்கள் இருக்கவில்லை.

பொதுமக்கள் கிளர்ச்சி மேற்கொண்டு, கலீபா உஸ்மானை கொலை செய்து விட்டு, அத்தனை உணர்வலைகளுடனும் ஹஸ்ரத் அலியை எதிர்கொண்டு, அவர்களுக்கான பைஅத்தை பிரகடனம் செய்வதற்காக தமது கைகளை நீட்டிய போது, உதவியாளர்கள் கிடைத்துவிட்டதற்கான தெளிவான சான்றின் பின்னர், அதனை ஏற்றுக் கொள்ளாது விடுவதற்கான எந்த நியாயமும் ஹஸ்ரத் அலி அவர்களுக்கு இருக்கவில்லை. எனவே, அவர்கள் மிகப் பேணுதலான முறையில் இஸ்லாமிய உலகின் தலைமைத்துவத்தை ஏற்றுக் கொண்டார்கள்.

ஹஸ்ரத் அலி அவர்கள், நபிகளாரின் மறைவுக்குப் பின்னர், தமக்கான உதவியாளர்கள் இல்லாதிருந்த போதிலும், தமது உரிமை தொடர்பான வேண்டுகோளில் உறுதியாக இருந்து வந்தார்கள். இது, உள்முரண்பாடுகளை அதிகரிக்கச் செய்து, இஸ்லாத்தின் மீதும் அதன் உறுதியான தேசியத்தின் மீதும் தீங்கை ஏற்படுத்தக்கூடியதாக இருந்து வந்தது. இஸ்லாத்தின் எதிரிகள், இச்சுற்றோட்டத்தை தமக்கு சாதகமாகப் பயன்படுத்தி, தமது இலாபங்களை அடைந்து கொள்வதற்கான நிலையை தோற்றுவிக்கக்கூடியதாக இது அமைந்தது.

ஹஸ்ரத் அலி அவர்கள், இஸ்லாத்தைப் பாதுகாக்க விரும்பினார்கள். இஸ்லாம், அவர்களிடத்தில் அனைத்தையும் விட மிக உயர்ந்த அந்தஸ்திலிருந்தது. ஹஸ்ரத் அலி அவர்கள், நிராகரிப்புக்கு எதிராக, நபி (ஸல்) அவர்களுடன் இணைந்து, அவர்களது போராட்டங்களிலும் யுத்தங்களிலும் பங்கெடுத்துக்

கொண்ட முன்னணி வீரராக இருந்த போதிலும், தற்போதைய இஸ்லாத்தினதும் முஸ்லிம்களினதும் நலன், வலியின் வேதனைகளுக்கு மத்தியிலும், கிலாபத்திற்கெதிரான தமது நடவடிக்கைகளையும் முயற்சிகளையும் கைவிடுவதில்தான் உள்ளது என எண்ணினார்கள்.

ஹஸ்ரத் அலி அவர்கள், தலைமைத்துவத்தின் மீது ஆசை கொண்டவர்களாக இருக்கவில்லை. இதனால், தமது சுயநலன்களை அடைந்து கொள்வதற்கான எந்த சாதனத்தையும் அவர்கள் பிரயோகிக்கவில்லை. அபூசுப்யான், ஹஸ்ரத் அலியிடம் வந்து, "உங்கள் கையை நீட்டுங்கள். நான் உங்களுக்கு பைஅத் செய்கின்றேன். அல்லாஹ் மீது ஆணையாக, நீங்கள் விரும்பினால், பெரும் குதிரை, மற்றும் காலாட் படையினரை நான் உங்களுக்காகத் திரட்டுவேன்" என்று கூறிய போது, அந்த உள்நோக்கம் மிக்க தீய கூற்றை நிராகரித்து ஹஸ்ரத் அலி அவர்கள் கூறினார்கள்: "அலாஹ் மீது ஆணையாக, நிச்சயமாக நீர் பெரும் குழப்பத்தை ஏற்படுத்துவதற்காகவே இதனை விரும்புகின்றீர். தொடராக இஸ்லாத்திற்கெதிரான அழிச்சாட்டியங்களை புரிந்து வந்த உமது உபதேசத்தில் எமக்கு எவ்வித தேவையுமில்லை"

ஹஸ்ரத் அலியின் இக்கூற்றிலிருந்து அவர்களது பொறுப்பு வாய்ந்த தூதுத்துவப் பணிநிலையை நாம் விளங்கிக் கொள்ள முடியும்.